உ

சிவமயம்.

# காசிக்கலம்பகம்.

மூலபாடம்.

## குமரகுருபரசுவாமிகள்

அருளிச்செய்தது.

சுத்தபாடமாகவழங்குவிக்கும்பொருட்டுத்தொண்டமண்
டலத்துவேளாளர்களில் உயர்துளுவவேளாளராகிய

தேனம்பேட்டை

வேங்கடகிருஷ்ணமுதலியார்

குமாரர்

சின்னத்தம்பிமுதலியார்

காஞ்சிபுரம்

சபாபதிமுதலியாரால்

பலபிரதிகளைக்கொண்டுபரிசோதிப்பித்துச்

சென்னைக்கல்விச்சங்கத்துத்

தமிழ்ப்புலவர்

திரு - வேங்கடாசலமுதலியாரது

சரஸ்வதிஅச்சுக்கூடத்தில்பதிப்பித்தார்.

சாலிவாகனசகாப்தம் - ௲எகூஉ - விகாரி௵வைகாசி௴

இதன்விலை - அணா - எ.



உ

கணபதி துணை.

# காசிக்கலம்பகம்.



காப்பு.

நேரிசைவெண்பா.

பாசத்தளையறுத்துப்பாவக்கடல்கலக்கி *
நேசத்தளைப்பட்டுநிற்குமே . . . . . . . . . . மாசற்ற
காரார்வரையீன்றகன்னிப்பிடியளித்த *
வோரானைவந்தெனுளத்து. *



## மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

ர்கொண்டகடலாடைநிலமகளுக்கணியான - - - - *
ார்கொண்டபொழிற்காசிக்கடிநகரங்குளிர்தூங்க - - *
ிடமருங்கிற்சிறுமருங்குற்பெருந்தடங்கணின்னமிர்தஞ் - *
டைமருங்கினெடுந்திரைக்கைப்பெண்ணமிர்தந்தலைசிறப்ப - *
ண்கதுவுகடவுண்மணிதெரிந்தமரர்கம்மியன்செய் - - *
ிண்கதுவுபொலங்குடுமிவிமானத்தின்மிசைப்பொலிந்தோய் *

ற்பனவுந்தவழ்வனவுநடப்பனவுமாய்நிலத்துக் - - - *
ற்பமரவிலகண்டுமுறுகளைகண்காணுமே - - - - *
ழங்கணுறுமுயிர்கடுயர்க்கடனீத்துப்பரங்கருணை - - *
ழங்குபரமானந்தமாக்கடலிற்றிளைத்தாட - - - - *
ையாதபழமறையின்முதலெழுத்திறெண்பொருளை - *
ையாதுகொடுத்திடுநின்வள்ளன்மைவாழ்த்துதுமே. - - * [இவை இரண்டுந் தாழிசை.]

ொழுத்துக்கொத்தவுடனீத்தார்க்குநீநவில்வ - - - *
தாமொழுத்தேமுழுதுமவமொவ்வண்ணமுணர்வதுவே - *

ன்பணிவதுடுப்பதுதோலெம்பிரான்றமர்களவர் - - *
ன்பணியும்பேறுடையார்திசைமுகனுமுகுந்தனுமே - * [இவை

செடிகொண்முடைப்புழுக்கூடேசிற்றடியோமிடுதிறைமற் - *
றடிகளடியார்க்களிப்பதானந்தப்பெருவாழ்வே - - - *

பற்பகலோற்றருந்தவரும்பெறற்கரியபரந்தாம - - - *
மெற்புடல்விற்றளியேமுங்கொளப்பெறுவதிறும்பூதே - *

திணம்புணர்வெண்டலைக்கலன்கொணேரிழைமுத்தித்திருவை - *
மணம்புணர்வார்க்கையனருண்மணவாளக்கோலமே - - *

முடைத்தலையிற்பலிகொள்வான்மூவுலகுமவரவர்தங் - - *
கடைத்தலையிற்றிரிவதுகொல்யாம்பெறுநின்காணியே - *

[ ஈரடித்தாழிசைகள். ]

உளதெனவிலதெனவொருவரொரளவையி - - - - *
னளவிலிலளவிடலரியதொருருவினை - - - - - *

இதுவெனலருமையினெழுதருமொழிகளு - - - - *
மதுவலவெனுமெனிலெவருனையறிபவர் - - - - *

அவனவரெதுவெனுமவைகளினுளனல - - - - - *
னவனவனிவனெனவெதிர்தருதகைமையை - - - *

அறிபவரறிவினுளறிவுகொடறிவுறு - - - - - - *
நெறியலதொருவருமறிவருநிலைமையை - - - - - *

[ இருசீரோரடி அம்போதரங்கம். ]

ஆறொடுபெண்ணுருவமைந்துநின்ற - னை
பூண்முலைகலந்துமைம்புலனும்வென்ற - னை
எண்வகையுறுப்பினேருருவெடுத்த - னை
தொன்மறைப்பனுவலின்றொடைதொடுத்தனை

இவைநான்கும்நாற்சீ
ஓரடிஅம்போதரங்க

வடவரைகுழையவளைத்த - - னை
மலைமகண்முலைகடிளைத்த - - னை
விடமமிர்தமரவிளைத்த - - னை
விசயனொடமர்செய்திளைத்த - னை
வரிசிலைமதனையெரித்த - - னை
மதகரியுரிவைதரித்த - - - னை
யருமறைதெரியவிரித்த - - னை
யுலகில்பல்கலைகடெரித்த - - னை

இவை எட்டும் முச்சீரோரடி
அம்போதரங்கம்.

| | | |
|---|---|---|
| ..ல்விழித்த - - லை | | |
| ..மொழித்த - - லை | | |
| ..றணிந்த - - - லை | | |
| ..றணிந்த - - லை | | |
| ..ழவலத்தி - - - லை | | |
| ..ழநலத்தி - - லை | | |
| ..ண்டத்தி - - - லை | | |
| ..ணிடத்தி - - - லை | } | இவை பதினாறும் இருசீரோரடி அம்போதரங்கம். |
| ..சிறந்த - - - லை | | |
| ..சிறந்த - - லை | | |
| ..ள்சுரந்த - - லை | | |
| ..டுரந்த - - - லை | | |
| ..களித்த - - - லை | | |
| ..ழ்தெளித்த - - லை | | |
| ..ரான்றுமாயி - லை | | |
| ..வுமாயி - - - லை | | |

..கில்பலபுவனங்களடங்கலுமுண்டொழிப்பாய்க்குக் - *
..ாலவிடமுண்டனையென்றுகூறுவதோர்வீறுமே - - *

..ின்மூன்றுபுவனமுங்கட்பொறிக்கிரையாப்பாலிப்பாய்க் - *
..யின்மூன்றுமெரிமடுத்தாயென்பதுமோரிசையாமே - *

..டயவரோமுக்குறும்புமறவெறிந்தாரொனிலடிகள் - - *
..கணைவிற்காமனை நீவென்றதுமோர்வியப்பாமே - - *

..கூற்றின்றிருநாமத்தொருகூற்றுக்கிலக்கென்று - - *
..கூற்றங்குமைத்தனையென்றிசைப்பதுமோரற்புதமே - *

[இவை நாற்சீரோரடி அம்போதரங்கங்கள்.]

..வாங்கு .............................. [இது தனிச்சொல்.

..குசூற்கொண்டதலைவியுநீயு - - - - - - *
..பகவெறிந்தமழ்விரங்குழவியை - - - - - *
..ர்தமூற்றிருக்குங்குமுதவாய்த்தேறல் - - - - *
..டுகினனைப்பமடித்தலத்திருத்திக் - - - - - *
..களிற்பருகியக்காமருகுழவி - - - - - - *

[இது பத்தடி ஆசிரியச் சுரிதகம்

யெழுதாக்கிளவியின்சுவைபழுத்த - - - - - - *
மழலைநாறமிர்தம்வாய்மடுத்துண்ணச் - - - - *
செஞ்செவிநிறைத்தநும்மஞ்செவிக்கடிகளென் - - *
புன்மொழிக்கடுக்கொளப்புகட்டினை - - - - - *
னின்னருள்விழைகுவாயிறும்பூதுடைத்தே - - - (க)

[நேரிசைவெண்பா.]

உடையாளகிலேசர்க்கோங்குழலைக்கோட்டி *
னடையாளமிட்டுவையாளானாற்........கடையிலவர்
செவ்வண்ணம்பெற்றார்திரளொடுநிற்கின்றாரை *
யெவ்வண்ணங்கண்டிறைஞ்சுவேம். (உ)

[கட்டளைக்கலித்துறை.]

இறைவளைக்காகம்பரிந்தளித்தாரகிலேசர்கொன்றை *
நறைவளைக்கும்முடியாரடிக்கேகங்கைநன்னதியின் *
றுறைவளைக்குங்குருகேருருகேசொன்றுதூமொழிகைக் *
குறைவளைக்கும்முங்கள்பேரிட்டதாற்சென்றுகூறிடுமே. (ங)

[புயவகுப்பு. இரட்டைஆசிரியச்சந்தவிருத்தம்.]

இடமறமிடைதருகடவுளர்மடவிய - - *
றொிதருகவரிநிழற்கட்டுயின்றன - - *
வினவளைகொடுமதனிடுசயவிருதென - - *
விறையவளெழுதுசுவட்டுக்கிசைந்தன - - *
விருவருநிகரொணவரிசிலைவிசயனொ - - - - *
டெதிர்பொருசமரினிளைப்புற்றிருந்தன *
விணையடிபரவியமலடிமுனுதவிய - - - *
விடியலினுணவொருதட்டைப்பரிந்தன - *

படவரவுமிழ்தருமணிவெயில்விடவளர் - - *
பரிதியொடெழுமுதயத்திற்பொலிந்தன - - *
பருகுமினமிர்தெனவுருகிருகவிஞர்கள் - - *
பனுவலின்மதுரவிசைக்குக்குழைந்தன - *
படொளிவிடுசுடர்வலயமதெனவொரு - - *
பருவரைநெடுவிலெடுத்துச்சுமந்தன - - *
பரர்புரமெரியொடுபுகையெழமலர்மகள் - - - *
பணைமுலைதழுவுசரத்தைத்துரந்தன - - *

மடலவிழ்தடமலரிதழியினிழிதரு - - - - - *
மதுமழையருவிகுளித்துக்கிளர்ந்தன - - - *
வழிதரவுதிரமுநிணமொடுகுடர்களும் - - - - *
வருநரகரியின்மதத்தைத்தடிந்தன - - - - *
மதகரியுரியதள்குலகிரிமுதுகினின் - - - - - *
மழைமுகிறவழ்வதெனப்பொற்பமைந்தன - - *
மலியுமிழ்நிலவொடுமடுதிறல்வெயிலெழ - - - *
மதிகதிர்வலம்வருவெற்பொத்துநின்றன - - *

இது மூன்றாமடி.

குடவளைதுறைதொறுமுடுநிரையெனவிரி - - - *
குளிர்நிலவெழவுமிழ்முத்தத்தடங்கரை - - - *
குலவியபடர்சிறைமடவனமொடுசில - - - - *
குருகுகள்சினையொடணைத்துத்துயின்றன - - *
குரைபுனல்வரநதிசுரர்தருமுருகவிழ் - - - - *
கொழுமலர்சிதறவிமுத்தத்துவிண்டொடு - - *
குலகிரியுதவியவளரிரவனமுலை - - - - - - *
கொழுநர்தமழகியகொற்றப்புயங்களே. - - (௪)

இது நான்காமடி.

[ நேரிசைவெண்பா. ]

புயலார்பொழிற்காசிப்பூங்கோயின்மேய *
கயலார்தடங்கணாள்காந்தன் . . . . . . . . . . . செயலாவி
யுய்யத்துதியாருதிப்பார்துதிப்பாரேல் *
வையத்துதியார்மறுத்து. (௫)

[ கட்டளைக்கலித்துறை. ]

மறைக்கோலங்கொண்டவகிலேசரோயின்றுமாதர்முன்னே *
பிறைக்கோலங்கொண்டுபுறப்பட்டவாமுன்பிறைமுடித்த *
விறைக்கோலமோலமெனத்தேவரோலமிடவிருண்ட *
கறைக்கோலங்கொண்டுங்கண்டத்தொளித்தகனல்விடமே. (௬)

[ அறுசீர்க்கழிநெடில் - ஆசிரியவிருத்தம். ]

த்தவாளிக்கும்விரகிலாக்கருப்புவில்வீணன்மீளவும்வாளாத் *
டுத்தவாளிக்குமேபகைமூண்டதித்தாயநன்மொழிக்கென்று *
த்தநான்மறைமுனிவரர்நால்வர்க்குமம்மறைப்பொருள்கூற *
டுத்தகோலமாயானந்தவனத்துமெம்மிதயத்துமிருந்தோனே. (௭)

[ கட்டளைக்கலித்துறை. ]

இருப்பாரவிமுத்தத்தெங்கேகண்மூடுவரொன்றும்வெள்ளிப் *
பொருப்பாளரோடித்திரிவதெல்லாமிப்புவனங்களை *
யுருப்பாதியிற்படைத்தோர்பாதியிற்றுடைத்தூழிதொறும் *
விருப்பாருயிர்களின்மேல்வைத்துத்தாஞ்செயும்வேலைகண்டே (

[ அறுசீர்க்கழிநெடில் - ஆசிரியவிருத்தம். ]

கண்ணொன்றுதிருநுதலிற்கனலுருவ *
மாப்படைத்தகாசிநாதா *
தண்ணொன்றுநறையிதழித்தாரொன்று *
ணெட்டுயிர்த்தாடளைமேல்வீழ்ந்தா *
ளெண்ணொன்றுமுணராமேகிடக்கின்று *
ளிதுகண்டாலெழுத்தொன்றேனுந் *
துண்ணெனன்றுவருவரோனத்துணிந்தனளோ *
வறியேனித்தோகைதானே. (கூ)

[ நேரிசைவெண்பா. ]

தோகையுயிர்முடிப்பான்றும்மைமுடித்தான்மதவேள் *
வாகைமுடித்திடவும்வல்லனே . . . . . . . . . . . . . யாகெடுவீர்
காமாந்தகர்காசிக்கண்ணுதலார்க்கோதீர்மற் *
றேமாந்திராமலெடுத்து. (ய)

[ கட்டளைக்கலித்துறை. ]

எடுக்கச்சிவந்தசிலம்படியாரகிலேசர்நறைக் *
கடுக்கைச்சடைமுடியாரடியார்க்குக்கலைகள்கொய்து *
கொடுக்கக்கொடுக்கவளர்கின்றவாவெறுங்கூட்டிலெரி *
மடுக்கக்குறையுயிர்மாதனைத்தேடுமதிக்கொழுந்தே. (யக)

[ அறுசீர்க்கழிநெடில் - ஆசிரியவிருத்தம். ]

கொழுதிவரிவண்டுழுதுழக்குங்குழலீர்நறுங்கட்கோதையிவ
ளழுதவிழிநீர்முந்நீராயுவர்நீராக்குமதுகூறீ
ரொழுதவரியதிருமார்பிலிளஞ்சேய்சிறுசேவடிச்சுவடு
முழுதுமுடையாண்முலைச்சுவடுமுடையார்காசிமுதல்வர்க்கே. (ய

[ நேரிசைவெண்பா. ]

வளைவளைக்கும்பொற்றடந்தோண்மைந்தர்க்கிவரார் *
நிரைவளைக்கையார்நகைக்குநேராக் . . . . . . . . கரையிற்
குவிமுத்தம்வெண்ணிலவுகொப்பளிக்குங்கங்கை *
யவிமுத்தஞ்சென்றிறைஞ்சாதார். (யங)

[ அறுசீர்க்கழிநெடில் - ஆசிரியவிருத்தம். ]

ூர்க்கும்படைவேளரசிருப்பென்றஞ்சாதடிகளருட்காசி *
ூர்க்குப்புதுத்தோரணம்வைத்தாலுமக்கிங்கிவள்பேச்சுரைப்பாரார் *
ார்சகுங்குமப்பூண்முலைச்சுவட்டைக்களையென்றோடிவளைந்துசுற்றிப் *
ார்க்குந்துளைமுள்ளெயிற்றுரகப்பணியீர்மோகந்தணியீரோ. (௰௪)

[ பிச்சியார். கட்டளைக்கலிப்பா. ]

தண்ணுலாம்பொழிற்காசித்தெருவினீர் *
தரித்திடுந்தவக்கோலமுஞ்சூலமும் *
பெண்ணொடாடுமப்பிச்சனுக்கொத்தலாற் *
பிச்சியாரெனும்பேர்தரித்தாடுவீர் *
வெண்ணிலாமுகிழ்க்குங்குறுமூரலால் *
வீணிலேயெம்புரத்தெரியிட்டநீர் *
கண்ணிறைவுமிக்காமனைக்காய்ந்திடற் *
கடவுணீரொன்றிறைஞ்சுதுங்காணுமே. (௰௫)

[ கட்டளைக்கலிப்பா. ]

காணுங்காணுநதிகளெல்லாம்புனற் *
சங்கையேயங்குளதெய்வம்யாவையுந் *
தாணுவெங்களகிலேசரோமற்றைத் *
தலங்கள்யாவுந்தடமதிற்காசியே *
பூணுமாசைமற்றென்றேயுடல்விடும் *
போதுநன்மணிகர்ணிகைப்பூந்துறை *
பேணுமாறுபெறவேண்டுமப்புறம் *
பேயொடாடினுமாடிப்பெறுதுமே. (௰௬)

[ கட்டளைக்கலிப்பா. ]

பெற்றவூர்வதும்வெண்டலையோட்டினிற் *
பிச்சையேற்றுத்திரிவதும்பேய்களே *
சுற்றமாகச்சுடலையில்வாழ்வதுந் *
தோலுடுப்பதுந்தொண்டர்க்கரிதன்றாற் *
கற்றைவார்சடைக்காசிப்பதியுளீர் *
கற்பந்தோறுங்கடைநாளுலகெலாஞ் *
செற்றுமீளப்படைக்கவும்வேண்டுமே *
தேவரீர்பதஞ்சிந்திப்பதில்லையே. (௰௭)

[நேரிசைவெண்பா.]

இல்லாளேமுப்பத்திரண்டறமுஞ்செய்திருப்பச் *
செல்லார்பொழிற்காசிச்செல்வனார் . . . . . . . . மெல்லப்
பாக்கின்றபுண்ணீர்படுதலைகொண்டைய *
யிரக்கின்றவாறென்சொல்கேன். (௰அ)

[கொச்சகக்கலிப்பா.]

சொல்லாவதுமறையேசொல்லுவதுநல்லறமே *
யில்லாவதுமுத்திக்கேதுவாமித்தலமே *
யல்லார்குழலரவுமாகொண்மணம்வயிரக் *
கல்லாயிருந்தவாகாசிப்பிரானார்க்கே. (௰௯)

[கட்டளைக்கலித்துறை.]

பிரானென்றவர்க்கொருபெண்ணொடுமோடிப்பெருங்கருணை *
தராநின்றகாசித்தடம்பதியார்வந்தென்றன்னகத்தே *
யிராநின்றனைம்புலக்கள்வர்கொள்ளையிட்டேகுதற்கே *
வராநின்றபோதுள்ளமாதனங்காத்துவழங்குதற்கே. (௨௰)

[கொற்றியார். அறுசீர்க்கழிநெடில் - ஆசிரியவிருத்தம்.]

வழுத்துமவர்க்கானந்தவாழ்வையருள்வார்காசிவளமையெல்லாங் *
கொழுத்ததமிழாற்பாடித்துளசிமணிதரித்தாடுங்கொற்றியாரோ *
பழுத்ததவக்கோலமுங்கைச்சங்குமாழியுங்கண்டுபணிந்தேமாகின் *
முழுத்ததவத்தால்யாமுமாலாயினேங்கூடிமுயங்குவீரோ. (௨௧)

[கட்டளைக்கலித்துறை.]

முயலாமலேதவமுத்தித்திருவைமுயங்கநல்குங் *
கயலார்பெருந்தடங்கண்ணிபங்காரருட்காசியிலே *
செயலாவதொன்றிலைவாளாநெடுந்துயில்செய்யுமுங்கள் *
பயலாகவேபணிசெய்வார்புவனம்படைப்பவரே. (௨௨)

[கட்டளைக்கலிப்பா.]

படுத்தபாயுடனேபிணிமூழ்கினும் *
பல்விழுந்துநரைத்தறமூப்பினு *
மடுத்ததிங்கிவர்க்கேபெருவாழ்வெனு *
மப்பெரும்பதியெப்பதியென்பிரேல் *
விடுத்துவிட்டிந்திரதிருவும்புவி *
வெண்குடைக்குளிடுமரசாட்சியுங் *
கடுத்ததும்புகளத்தரைத்தேடுவார் *
காதலித்துவருந்திருக்காசியே. (௨௩)

[ கட்டளைக்கலித்துறை. ]

க்கோலங்கொண்ட நற்றேன்மொழியாளெண்டிசையினு நின் *
நக்கோலமேகண்டுங்கண்டிலள்போலுமொழுகுநறை *
ந்க்கோலநீலக்குழல்சேரவிழுத்தவாணதொல்லை *
நக்கோலமிட்டுணராயெங்குமாகியிருப்பதுவே. (உ௪)

[ கட்டளைக்கலித்துறை. ]

நகுங்குமக்குன்றும்பிரர் பூப்பக்காமவெரியினினின் *
நகும்பசும்பொன்னுக்கோர்மாற்றுண்டேலுமையாய்தொடுத்துச் *
ருகுநறுங்கொன்றைதேன்பிழிந்தூற்றச்சிறைச்சுரும்பர் *
ருகும்பொலஞ்சடையாய்காசிவாழ்மூக்கட்பண்ணவனே (உ௫)

[ கலிநிலைத்துறை. ]

பண்ணேர்வேதம்பாடியகாசிப்பதியாயிப் *
பெண்ணேயொருவனெய்கணையைந்தும்பெய்தானு *
னுண்ணேர்நின்றாயின்னருளாலென்னுயிரன்னாள் *
கண்ணேர்நிற்றற்கொல்கியொழிந்தகழுநீரோ (உ௬)

[ கட்டளைக்கலித்துறை. ]

ழியுந்தலைக்கலன்பூண்டாடுங்காசிக்கடவுணுதல் *
ழியுமிடக்கண்ணும்வெண்ணெருப்பேயவ்விழியிரண்டிற் *
பாழியுங்கனல்விழிகாமனைக்காய்ந்ததப்போரிலுடைநீ *
பாழியும்படைகளென்றுவெமைக்காயுமற்றோர்விழியே. (உ௭)

[ மடக்கு. அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

மழுவதன்பாகஞ்சுகமேவெங்கரியினுரிகஞ்சுகமே *
பொழிலடிகட்குளமாலயமேதாழுனிவோருளமாலயமே *
சகமரும்பணியென்பணியேயாட்கொளமேற்கொள்வதென்பணியே
களிநின்றவளம்பதியேவாழ்வதுகாசிவளம்பதியே. (உ௮)

[ மடக்கு. கட்டளைக்கலிப்பா. ]

வண்ணமேனியரும்புவனங்களே *
வாசம்வாசமரும்புவனங்களே *
நண்ணுமாலயமாதவரங்கமே *
ஞாலமேழ்தருமாதவரங்கமே *
தண்ணென்மாலைதருமருக்கொன்றையே *
தருவதையர்தருமருக்கொன்றையே *
கண்ணினிற்பர்மனத்திருக்கோயிலே *
காசியேயவர்க்கோர்திருக்கோயிலே. (உ௯)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

திருதுசினக்கூற்றினெயிற்றிடைக்கிடந்துங் *
கடைநாளிற்றிரையேழொன்றாய்ப் *
பெருகுமுழுநீத்தத்திற்றிளைத்தாடப் *
புணைதேடும்பேதைநெஞ்சே *
யுருகிலைநெக்குடைந்திலைமொண்டானந்த *
வனத்தேனையோடியோடிப் *
பருகிலைகண்ணரும்பிலைமெய்பொடித்திலைமற் *
றுனக்கென்னபாவந்தானே. (கய)

[ நேரிசைவெண்பா. ]

பாவலருநாவலரும்பண்மலரக்கண்மலருங் *
காவலருமேடவிழ்க்குங்காசியே ..........தீவளருங்
கஞ்சக்கரத்தான்கலைமறைக்குநாயகமா *
மைஞ்சக்கரத்தானகம். (கக)

[ நேரிசைவெண்பா. ]

அகமேயவிமுத்தமையரிவர்க்காகஞ் *
சகமேழுமீன்றெடுத்ததாயே..............மிகமேவு
மெண்ணம்பாமேயெமக்களித்தன்முச்சுடருங் *
கண்ணம்பரமேகலை. (கஉ)

[ அம்மானை. மடக்குத்தாழிசை. ]

கலைமதியின்கீற்றணிந்தகாசியகிலேசர் *
சிலைமதனைக்கண்ணழலாற்செற்றனர்காணம்மானை *
சிலைமதனைக்கண்ணழலாற்செற்றனரேயாமாகின் *
மலைமகட்குப்பாகம்வழங்குவதேனம்மானை *
வழங்காரோவப்பாலுமாலானாலம்மானை. (கங)

[கட்டளைக்கலித்துறை. ]

அம்மனைதம்மனையாத்திருக்கோயிலவிமுத்தமா *
வெம்மனையாய்த்தந்தையாயிருந்தாரடிக்கீழிறைஞ்சீர் *
நம்மனைமக்களென்றேக்கறுப்பிருங்கணூலநீதாந் *
சொம்மனைவைத்தெப்படிநடப்பீர்யமன் ஆதனொடே. (கச)

[ கட்டளைக்கலிப்பா; ]

ஆறுகொண்டுந்தலைமைத்தோழமைகொண்ட *
தொண்டர்தண்டமிழ்ச்சொற்கொண்டகுண்டலக்
காதுகொண்டெங்கவிதைகொண்டாட்கொண்ட *
காசிநாதர்கருத்தேதறிகிலேம் *
போதுகொண்டொருபச்சிலைகொண்டுதான் *
பூசைசெய்திலர்புண்டரிகப்பத *
மேதுகொண்டுகொடுப்பர்கொடுப்பரோ *
விருவருக்குமற்றென்படுநெஞ்சமே. (௩௫)

[ சித்து - நேரிசைவெண்பா. ]

ஏடவிழ்பொற்கொன்றையகிலேசரன்பர்க்கேயிருப்பை *
யாடகமாக்கிக்கொடுத்தோமவ்வளவோ ......... நீடுதிறல்
காட்டுமிமையோர்க்கிருப்புகற்கனகமாக்கியண்ட *
வோட்டினையும்பொன்னாக்கினோம். (௩௬)

[ நேரிசையாசிரியப்பா. ]

பொன்னுருக்கன்னபூந்துணர்க்கொன்றையும் *
வெள்ளிமுளையன்னவிரிநிலாக்கொழுந்துங் *
காந்தண்மலர்ந்தன்னபாந்தளினிரையுந் *
திரைசுழித்தெறியும்பொருபுனற்கங்கையில் *
வெள்ளிதழ்க்கமலம்வள்ளவாய்விரித்தென *
முழுநகைமுகிழ்க்குங்கழிமுடைவெண்டலை *
தோலடிச்செங்காற்பால்புறாவரிச்சிறைக் *
கிஞ்சுகமலர்ந்தசெஞ்சூட்டெகினத் *
துருவெடுத்தகல்வான்றுருவியுங்காணாத் *
தொன்மறைக்கிழவசென்னிமற்றியானே *
கண்டுகொண்டனனிக்கடவுண்மாமுடியெனப் *
பெருமகிழ்சிறப்பக்குரவையிட்டார்த்து *
வெள்ளெயிறிலங்கவிளைவிற்சிரித்தெனப் *
பெருவியப்பிழைக்குமெரிபுரைசடையோ *
யாள்வழக்கறுக்கும்வாளமர்தடங்கண் *
மின்னிழைமருங்குற்சின்மொழிமகளி *

ரொழுகொளிமிடற்றினழகுகவர்ந்துண்டெனக் *
கயிறுகொண்டார்க்குங்காட்சித்தென்ன *
மரகதங்காய்த்துப்பவளம்பழுக்குங் *
கமஞ்சூற்கமுகின்கழுத்திறயாத்து *
வீசொளிப்பசும்பொனூசலாட்டயல்வரப் *
பருமணிக்கமுகின்பசுங்கழுத்துடைந்து *
நுரைபடுகுருதித்திரடெறித்தென்ன *
முழுக்குலமுரிந்துபழுக்காய்சிதறு *
மங்குல்கண்படுக்குமதுமலர்ப்பொதும்பர் *
கங்கைசூழ்கிடந்தகாசிவாணு *
வைவளிப்பித்தெனுமவைதலையெடுப்ப *
மெய்விட்டைவருங்கைவிடுமேல்வையின் *
மாமுதறடிந்தகாமருகுழவியும் *
பொழிமதங்கனையுமழவிளங்களிறு *
மூண்டெழுமானம்பூண்டழுக்கறுப்ப *
விடக்கையினணைத்துநின்மடித்தலத்திருத்தி *
யுலகமோரேழும்பலமுறைபயந்து *
முதிராவிளமுலைமுற்றிழைமடந்தை *
யொண்டொடித்தடக்கையின்வீசுநுண்டுகிற் *
ரூகையிற்பிறந்தநாகிளநந்தென்றன் *
மோகமுந்தளர்ச்சியுந்தாகமுந்தணிப்ப *
மறைமுதற்பொருளின்றிறைசுவையமுதினை *
யஞ்செவிமடுத்துணவூட்டிநின் *
குஞ்சிதவடிக்கீழ்க்குடியிருத்துகவே. (௩௭)

[ அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம். ]

குடியிருக்கும்புன்குரம்பைகுலைந்திடுநாட் *
கொலைக்கூற்றங்குமைத்தசெம்பொ *
னடியிருக்கும்பரந்தாமப்புக்கில்புகுந் *
தானந்தவமுதமாந்திக் *
கடியிருக்குநறைக்குழன்முத்தித்திருவை *
முயங்கிடவுங்கடவேன்கொல்லோ *
துடியிருக்குமிடையவளோடவிமுத்தத் *
திருந்தபரஞ்சோதியானே. (௩அ)

[கலி. சந்தத்தாழிசை.]

ாதியொன்றிலொருபாதிசத்தியொருபாதியும்பரமசிவமெனத் *
தாகுத்துவைத்தவவிமுத்தநாயகர்துணைப்பதம்பரவுசவியரோ *
மாதியோதியிளைப்பர்வேதமுணர்த்துதத்துவமுணர்கிலா *
ணரும்வண்ணமனுபவத்தில்வந்திடும்மாருண்மைவாசகமுணர்த்துமே
மதிஞலறமனைத்தினும்பசுவினைப்படுத்தநல்வளர்த்திடும் *
ாகமேயதிகமென்பதன்பர்தமிறைச்சிமிச்சிலதிச்சையா *
ாதியாரறிவாதுகிடக்கவதுவருந்திலப்பொழுதிலேபெறத் *
ரியதோர்பரமசுகம்விளைந்திடுவததுமறுத்தவிரவில்லையே. (௫௯)

[கட்டளைக்கலித்துறை.]

இல்வாழ்வைவிட்டுக்கதிவேட்டடையவர்க்கேழைபங்க *
னல்வாழ்வையேதருங்காசிப்பிரானறும்பூங்கடுக்கை *
வல்வார்முலைக்கொம்பனையத்தந்தைதாண்மழுவாலெறிந்து *
கொல்வாரொருவருக்கல்லாதெவர்க்குங்கொளற்கரிதே. (௬௰)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

காள்ளையிடச்சிலர்க்குமுத்திச்சரக்கறையைத்திறந்துகொடுத்தவந்தகோடிப்
ள்ளைகள்பெற்றுடையபெருமனைக்கிழத்திக்கேகுடும்பம்பேணுமென்று
ள்ளபடியிருநாழிகொடுத்ததிலெண்ணான்கறமுமோம்புசென்று *
ள்ளல்வளவயற்காசியாண்டகையார்பெருந்தகைமையழகிதாமே. (௬௧)

[குறம். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

அழகுதுயில்குங்குமக்கொங்கையணங்கேயெங்களருட்காசிக் *
குழகர்மகற்குமகட்கொடுத்தகுடியிற்பிறந்தகுறமகள்யா *
னுழுகுதொடிக்கைக்குறியுமுகக்குறியுந்தருமொள்வளைக்குறியும்
புழுகுமுழுகுமுலைக்குறியுமுடையாரவர்பொற்புயந்தானே. (௬௨)

[கட்டளைக்கலித்துறை.]

புயல்வண்ணக்கண்ணற்கொளித்தவக்கள்வன்புணர்ப்பையெண்ணாள்
கயல்வண்ணக்கண்ணிதன்கண்ணினுட்புக்கதுகண்டிருந்துஞ் *
செயல்வண்ணங்கண்டிலள்வாளாப்புறத்தெங்குந்தேடுகின்றாள் *
வயல்வண்ணப்பண்ணையவிமுத்தத்தானைமனத்துள்வைத்தே. (௬௩)

[மறம். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

வையமுழுதொருங்கீன்றவிடப்பாகரானந்தவனத்தில்வாழும் *
வெய்யதறுகண்மறவர்குலக்கொடியைவேட்டரசன்விடுத்ததூதா *
கையிலவன்றிருமுகமோகாட்டிருகண்டொட்டுமுட்டைகதையிற்றுக்கிச்
செய்யகொடிறுடைத்தகல்வாய்கிழித்தரிவோநாசியொடுசெவியுந்தானே. (௬௪)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

தாக்குபடைவேள்கணைமலைழக்குத்தரியாதிருகண்மழையருவி *
தேக்குமிவட்கானந்தவனத்திருந்தாருள்ளத்திருந்தார்கொல் *
காக்கவரியவிரவாடைக்காற்றுக்குடைந்துகரந்துவச்சை *
மாக்களெனவேமுடவலவன்வளைவாயடைக்குமழைநாளே. (சரு)

[ கட்டளைக்கலித்துறை. ]

மழைவளைக்கும்பொழிற்காசிப்பிரான்வெற்பில்வண்டறைபூந் *
தழைவளைக்கைக்கொடுத்தேன்கண்ணிலொற்றித்தளரிடைத
ழிழைவளைக்குங்கொங்கையூடணைத்தாளித்தழையினுள்ளே *
கழைவளைக்குஞ்சிலைவேளனையாயிதைக்கண்டுகொள்ளே. (சசு)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

கண்ணிருக்குந்திருநுதலுங்கனலிருக்குந்திருக்கரமுங்கலந்தோர்பே
பெண்ணிருக்குமிடப்பாலும்பிறையிருக்குமவுலியுமாய்ப்பிரிக்கலாகா
வெண்ணிருக்குங்கணத்தொடுமானந்தவனத்திருப்பாரையெங்கேகாண்ட
பண்ணிருக்குமறைகளுமெண்கண்ணனுங்கண்ணனுமமரர்பலருந்தா

[ கட்டளைக்கலித்துறை. ] (ச

பல்லாண்டுதம்மைப்படைத்தவத்தேவரைப்பாரப்பைம்பொன்
வில்லாண்டதோள்கொட்டியெந்தையர்கோலவிடம்பழுத்த *
வல்லாண்டகண்டத்தெம்மாதிப்பிரானவிமுத்தத்திலே *
சில்லாண்டிருந்துசிவமாய்ச்செலுஞ்சிறுசெந்துக்களே. (சஅ)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

செற்தேனொழுகும்பொழிற்காசிசிறுநண்ணுசுப்பிற்பெருந்தடங்க
பைந்தேனொழுகுமிடப்பாகர்படைவிடென்பதுணராய்கொல்
வந்தேன்வளைந்தாயெமைப்பாவிமதனுவினையேவிளைந்தபோ
ருய்ந்தேகுவதிங்கரிதனற்கணுடையார்மழுவாட்படையாரோ. (ச

[ மதங்கி. அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

படலைநறுங்கடுக்கைமுடிப்பரஞ்சுடரரரிசைபாடிப்பசுந்தேன்பில்கி
மடலவிழ்பூம்பொழிற்காசிமணிமறுகில்விளையாடுமதங்கியாரே
யுடலுமெமக்குயிருமொன்றேயோடரிக்கண்வாளிரண்டுமொழியவென்
தொடலைவளைத்தடக்கையின்வாளிரண்டெடுத்துவீசிடநீர்தொடங்குமா

[ கலித்தாழிசை. ] (ரு

தொடங்காமேபனிமலருந்தூவாமேநல்குங் *
கடங்கால்களிற்றுரியார்காசிவரைம்பாடி *
விடங்கான்றகன்றுகுழைமேற்போய்க்குடங்கைசீ *
கடங்காதவுண்கணீராடுகபொன்னூசல் *

அம்பொன்மலர்க்கொம்பன்னீர்பாடுகபொன்னூசல். (௫௧)

[ நேரிசைவெண்பா. ]

பொன்னந்தாதென்னமலர்ப்பூந்துறையிற்புண்டரிகத் *
தன்னந்தாதாடுமவிமுத்த .................. ரின்னமிர்தா
முன்னங்கடுக்கைமுகந்துண்டார்நல்காரோ *
யின்னங்கடுக்கையிவட்கு (௫௨)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

திரண்டுசுமந்தொசியுங்கொடியன்னீரவிமுத்தங்குடிகொண்டாக *
ரன்றிரண்டுவடிவானார்திரள்புயத்துமார்பகத்துமமிழ்தேன்பில்கி *
திரண்டதெனப்புரளும்பொலங்கடுக்கைத்தாயத்தின்விரைத்தாதாடிப்
ரன்றிரண்டதெனவிருக்கும்பொறிவண்டுசெய்தவமென்புகலுவீரோ.

[ கொச்சகக்கலிப்பா. ] (௫௩)

புகுமேமதிக்கொழுந்தும்பொன்மாலைப்போது *
நகுமேகிளையுநகைத்தானமக்கென்னே *
யுகுமேலுயிர்காசியுத்தமனைக்காணத் *
தகுமேயப்போதிதழித்தாரும்பெறலாமே (௫௪)

[ கொச்சகக்கலிப்பா. ]

ஆமோவவிமுத்தத்தையரோவெண்பழிவீண் *
போமோவயிரவர்தஞ்சாதனமும்பொய்யாமோ *
தேமோதுகொன்றைச்செழுந்தாமநல்காநீர் *
தாமோதருவீருமதுபரந்தாமமே (௫௫)

[ கலிநிலைத்துறை. ]

பரந்தாமத்தைப்பல்லுயிர்கட்குப்பாலிப்பார் *
வரந்தாமத்தைத்தருவதைநீர்பின்வழங்காரோ *
புரந்தாமத்திற்பொலிதருகாசிப்புரமானார் *
திரந்தாமத்தையெனப்புகலீரோநீதிழையீரோ (௫௬)

[ பாண். நேரிசைஆசிரியப்பா. ]

இழுமென்மழலையின்னமுதுறைப்பப் *
பிழிதேனொழுக்கினொழுகுமின்னரம்பின் *
வள்ளுகிர்வடிம்பின்வரன்முறைவருடத் *
தெள்விளியெடுக்குஞ்சிறியயாழ்ப்பாண *
வாழியகேண்மதிமாற்றமொன்றியானு *
மேழிசைப்பாணன்மற்றிறைமகனலனே *
பலவுடன்பழிச்சுவதொழிகமற்றம்ம *
சிலபகல்யானுநின்னிலைமையனுசி *

நலம்பாடறியாவிலம்பாடலைப்ப *
நீர்வாய்ச்சிதலையுநூல்வாய்ச்சிலம்பியுஞ் *
சிலவிடமேய்ந்தசிறுபுன்குரம்பையின் *
மசகமுமூலங்கும்வாய்ப்படைக்குடவனும் *
பசையில்யாக்கைத்தசைகறித்துண்ண *
வரும்பசிக்குணங்கியும்பெரும்பிணிக்குடைந்துஞ்
சாம்பல்கண்டறியாவாம்பிபூத்த *
வெலிதுயிலடுப்பிற்றலைமடுத்தொதுங்கிச் *
சிறுசிறாரலறப்பெருமனைக்கிழத்தி *
குடங்கையிற்றாங்கியகொடிற்றினள்குடங்கைக் *
கடங்காவுண்கணுறலைத்தொழுக *
வழுகுரற்செவிசுடவிழுமநோய்மிக்குக் *
களைகண்காணுதலமருமேல்வையிற் *
கடவுணல்லூழ்பிடர்பிடித்துந்தக் *
குரைபுனற்கங்கைக்கரைவழிச்சென்றாங்குத் *
தேம்பழுத்தழிந்தபூம்பொழிற்படப்பையிற் *
கடவுட்கற்பகக்கொடிபடர்ந்தேறி *
வான்றொடுகமுகின்மடற்றலைவிரித்து *
நான்றனதிசைதொறுநறுநிழற்கதலித் *
தேங்கனிபழுத்தபூங்குலைவளைப்ப *
வம்மலர்க்கொடியிற்செம்முகமந்தி *
முடவுப்பலவின்முட்புறக்கனியைப் *
புன்றலைச்சுமந்துசென்றிடுங்காட்சி *
குடமிசைக்கொண்டொருகூன்மிடைகிழவ *
னெடுநிலைக்கம்பத்தின்வடமிசைநடந்தோ *
னிறும்பூதுபயக்குநறும்பணைமருதக் *
கன்னிமதிலுடுத்தகாசிமாநகரம் *
பெருவளஞ்சுரக்கவரசுவீற்றிருக்கு *
மழுவலனுயர்த்தவழனிறக்கடவுள் *
பொன்னடிவணங்கியின்னிசைபாடலு *
மந்நிலைக்கண்ணேயகல்விசும்பொரீஇச் *
சுரபியுந்தருவும்பெருவளஞ்சுரப்ப *
விருமையும்பெற்றனன்யானேநீயுமத் *
திருநகர்வளமைபாடியிருநிலத் *

திருநிதிக்கிழவனெக்கருப்பத் *
திருவொடும்பொலிகபெருமகிழ்சிறந்தே. (௫எ)

[ வண்டுவிடுதூது. அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம். ]

றைவிரிக்குமதுகரங்காடேம்பிழிபூம்பொழிற்காசித்திருநாடாளு *
றைவிரிக்குஞ்சிலம்படியார்திரள்புயத்துப்புரளுநறுமலர்ப்பூங்கொன்றை
றைவிரிக்குமிதழ்க்கரத்தாலூட்டுமதுவிருந்துண்டுநயந்துமற்றென் *
றைவிரித்தோரிருவரிசைகூட்டுண்ணுந்திருச்செவிக்கேகூறு வீரோ.
[ கட்டளைக்கலித்துறை. ] (௫அ)

கூற்றடிக்கஞ்சிக்குலையுநெஞ்சேயஞ்சல்கோச்செழியன் *
மாற்றடிக்கஞ்சுமிடப்பாகனைமள்ளர்கொன்றகருஞ் *
சேற்றடிக்கஞ்சமலர்வயற்காசிச்சிவக்கொழுந்தைப் *
போற்றடிக்கஞ்சலிசெய்பற்றுவேறுபுகலில்லையே. (௫௯)
[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

இலைமுகங்குழைத்தபைம்பூணேந்திளமுலையோடாடு *
மலைமுகங்குழைத்தகாசிவரதர்கண்டிலர்கொன்மாரன் *
சிலைமுகக்கணைக்கெம்மாவிசெகுத்துணவிருந்ததிங்கட் *
கலைமுகம்போழ்ந்தகாயங்களங்கமாய்விளங்குமாறே. (௬௰)
[ கட்டளைக்கலித்துறை. ]

விளங்கனியொன்றெறிவெள்விடையோடும்விழிக்கணுழைந் *
துளங்கனியப்புகுந்தாய்விரகானலத்துற்றதென்னும் *
வளங்கனிபண்ணைவயல்சூழவிமுத்தவாணநறுங் *
களங்கனியென்றுமைகைக்கிளியார்க்குங்கறைக்கண்டனே. (௬௧)
[ சந்தத்தாழிசை. ]

ண்டமட்டுமிருண்டுபாதிபசந்துபாதிசிவந்துளார் *
காசிநாதர்கரத்துவைத்தகபாலமொன்றலதில்லையா *
ண்டுகோடியின்மேலுமையர்பதம்பெறக்கடவாரவர்க் *
கொவ்வொருத்தர்கரத்திலொவ்வொர்கபாலம்வேண்டுமதற்கெலாம் *
ண்டிருந்தவிரிஞ்சன்மார்தலைமாலையுஞ்செலவாய்விடிற் *
பாரமென்றலைமேல்வருங்கொலெனுங்கவற்சியினூற்பசுங் *
காண்டல்வண்ணர்துயில்கொள்ளவுந்துயிலார்பிதாமகனொனுங் *
கொள்கைகண்டும்விழைந்தவாவவர்பதஞ்சமீரகுமாரனே. (௬௨)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

கும்பமிரண்டுசுமந்தொசியுங்கொடிநுண்மருங்குலிறுமிறுமென்
றம்பொற்பசுங்கொம்பன்னுளையாகத்தணைத்தவகிலேசா
செம்பொனிதழித்தெரியலையேசிந்தித்திருப்பதிரண்முலையும்
பைம்பொனுருவும்பீர்பூத்தபவளச்செவ்வாய்ப்பசுங்கிளிகளே. (௬

[ கட்டளைக்கலித்துறை. ]

கிள்ளைக்கமிர்தமொழிசாற்றிடுங்கிஞ்சுகவிதழ்ப்பெண் *
பிள்ளைக்கிடந்தந்தகாசிப்பிரான்பிறையோடுமுடிக் *
கொள்ளைச்சிறைவண்டுகூட்டுணுங்கொன்றையுங்கூடவைத்தார்
வள்ளக்கலசமுலைக்கங்கையாளுயிர்வாழ்வதற்கே. (௬௪)

[ கலிவிருத்தம் ]

வாட்டடங்கண்மழைப்புனன்மூழ்கியே *
சேட்டிளங்கொங்கைசெய்தவமோர்கிலார் *
தோட்டிளங்கொன்றைசூடிப்பொனம்பலத் *
தாட்டுவந்தவவிமுத்தவாணரே. (௬௫)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

நரைமுதிர்ந்தனகண்கள்பஞ்சார்ந்தனநமன்றமர்வழிக்கொண்டார்
திரைமுதிர்ந்துடறிரங்கினதிரங்கலைசெயலிதுமடநெஞ்சே
யுரைமுதிர்ந்தவர்சூழாத்தொடுமடைதியாலொழுகொளிமுடிக்கங்கை
கரைமுதிர்ந்திடாக்கலைமதிமுடித்தவர்காசிநன்னகர்தானே. (௬

[ வஞ்சித்துறை. ]

நகரமாய்மறைச் *
சிகரமானதான் *
மகரமாயினு *
னிகரில்காசியே. (௬௭)

[ கட்டளைக்கலித்துறை. ]

இல்லொன்றெனவெனிதயம்புக்காய்மதனெய்கணைகள்
வல்லொன்றுபூண்முலைமார்பகம்போழ்வனமற்றென்செய்கே
னல்லொன்றுகூந்தலணங்கரசோடுமொராடகப்பொன்
வில்லொன்றுகொண்டவிமுத்தத்திலேநின்றவிண்ணவனே. (௬

[ மருட்பா. ]

விண்ணமிர்துநஞ்சாம்விடமுமமிர்தமா *
முண்ணமிர்தநஞ்சோடுதவலாற்.........றண்ணென்
கடலொடுபிறந்தனபோலுந்தடமலர்க் *
கடிநகர்க்காசியுண்மேவு *
மடலவிழ்கோதைமதர்நெடுங்கண்ணே. (௬௯)

[ வஞ்சிவிருத்தம். ]

கண்ணொடாவிகருத்துமா *
யுண்ணிறைந்ததொரொண்பொரு *
ணண்ணுமாநகரானதா *
லண்ணலாரவிமுத்தமே. (௭௰)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

தாடிமடித்தலத்தோரிளஞ்சேயையுலகீன்றமுதல்வியோடும் *
ந்தாடுவீர்பொதுவினின்றுநுமமக்கிந்தவாரமென்னே *
த்தாடுசடைபொடுமானந்தவனத்தேகுறுந்தாணெடும்பூதத்தோ *
ரத்தாடுவீரடிகட்கெல்லோமும்பிள்ளைகளென்றுணர்ந்திடீரோ. (௭௧)

[ சம்பிரதம். ஆசிரியவிருத்தம். ]

டகிலகோடியுமிழ்ந்திடுவன்முகிலேழுமொக்கப்பிழிந்துகடலே *
டன்வாய்மடுத்திடுவன்வடமேருமூலத்தொடும்பிடுங்கிச்சுழற்றி *
டபகிரண்டமுமடித்துடைப்பன்புவனமவையேழுபிலமேழுமா *
டைவடைவடுக்கியவடுக்கைக்குலைப்பனிவையத்தனையும்வித்தையலவாங்
ண்டன்மணிவண்ணனுமுண்டகக்கண்ணனுங்குஞ்சிதச்செஞ்சரணமுங்
டிலகோடீரமுந்தேடியதலமுமண்டகோளமுந்திருவியோடப் *
டைமறையோலமிடவெளியினடமாடும்பரஞ்சுடர்பொலிந்தகாசிப்
தியிலடையாமலிப்பல்லுயிர்த்தொகுதியும்பரமபதமடைவிப்பனே.

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ] (௭௨)

ாகுழைக்குமழைமுகில்காள்விண்டலர்தண்டுழாய்ப்படலைவிடலையென்ன
ாகுழைக்கும்பொழிற்காசியணிநகருக்கேகுதிரோலறன்மென்கூந்தல்
ாகுழைக்குழலைகுழைப்பக்குழைதிரடோளழகுமுடிவணங்கியென்னக்
ாகுழைக்குமலைகுழைத்தகண்ணுதற்கென்பேதைதிறங்கழறுவீரோ.

[ கட்டளைக்கலித்துறை. ] (௭௩)

ழக்கரும்பைக்குழைத்தான்மதவேளக்கணத்திலம்பொற் *
ழக்கரும்புங்குழைந்திட்டதந்தோகுளிர்தூங்குதுளி *
ழக்கரும்பும்பொழிற்காசிப்பிரான்மலையாண்முலைபோழ் *
ழக்கரும்புற்றரவாடநின்றாடியமுக்கணனே. (௭௪)

[ கட்டளைக்கலித்துறை. ]

கண்ணஞ்சனத்தைக்கரைத்தோடுநீர்கடல்செய்யநின்று *
ளுண்ணஞ்சனத்துக்குமஞ்சவைத்தாரும்பரோட்டெடுப்பப்
பண்ணஞ்சநச்சமிர்தாக்கொண்டகாசிப்பரமர்பச்சைப் *
பெண்ணஞ்சநச்சரவார்த்துநின்றாடுமப்பிஞ்சகரே. (௭௫)

[ கட்டளைக்கலிப்பா. ]

கருகுகங்குற்கரும்பகடூர்ந்துவெண் *
கலைமதிக்கொலைக்கூற்றங்கவர்ந்துயிர் *
பருகுதற்குக்கரத்தால்விரிநிலாப் *
பாசம்வீசிவளைத்ததிங்கென்செய்கேன் *
முருகுநாறுகுழற்பொலங்கொம்பனீர் *
முத்தர்வாழவிமுத்தமுநெக்குடைந் *
துருகுபத்தர்தஞ்சித்தமுங்கோயிலா *
வுடையநாதற்குணாத்திடுவீர்களே. (எசு)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

உரைத்தநான்மறைச்சிரத்துமைந்தவித்தவருளத்தும்வண்டொருகோ
திரைத்தபூங்குழனிறைவளையவளொடுநின்றவருறைகோயில்
குரைத்தெதண்டிரைக்கங்கைமங்கையர்துணைக்கொங்கைமான்மதச்சேற்
கரைத்திருங்கடல்கருங்கடலாச்செயுங்காசிமாநகர்தானே. (எ

[ கட்டளைக்கலிப்பா. ]

மானமொன்றுநிறையொன்றுநாணொன்று *
மதியமொன்றுகுயிலொன்றுதீங்குழற் *
கானமொன்றுகவர்ந்துணுமாமதன் *
கணைக்கிலக்கென்னுயிரொன்றுமேகொலாம் *
வானமொன்றுவடிவண்டகோளமே *
மவுலிபாதலமேழ்தாண்மலையெட்டு *
தானமொன்றுபுயமுச்சுடருமே *
நயனமாப்பொலியும்மகிலேசனே. (எஅ)

[ நேரிசைவெண்பா. ]

அகிலாண்டமாயகண்டமானவகிலேசா *
முகிலாண்டசோலையவிமுத்தா . . . . . . . . . . . . . . . நகிலாண்ட
சின்னவிடைப்பாகாதிருநயனஞ்செங்கமல *
மன்னவிடைப்பாகாவருள். (எகூ)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

அருகுமதன்குழைத்தகழைதெறித்தமுத்தேறுண்டெழுவண்டரற்றுமோ
பெருகுசிறுநாணொலியென்றறிவழிந்துபேதுறுமிப்பேதைக்கென்
முருகுபசும்பொன்னசும்புதசும்புவிசும்பிரவியெனவுடைந்துகஞ்ச
முருகுயிர்க்கும்பொலங்குடுமிவிமானத்திற்பொலிந்தவவிமுத்தனோ.(அ

[கட்டளைக்கலித்துறை.]

முத்திக்குவேட்டவர்மோட்டுடற்பாரமுடைத்தலையோ *
டத்திக்குஞ்சாம்பற்குமோம்பினராலிவையன்றியப்பாற் *
சித்திப்பதுமற்றிலையோலுங்காசிச்சிவபெருமான் *
பத்திக்குக்கேவலமேபலமாகப்பலித்ததுவே. (அக)

[கலிநிலைத்துறை.]

பல்வேறுருவாய்நின்றருள்காசிப்பதியுள்ளீர் *
வில்வேறில்லைப்பூவலதம்பும்வேறில்லை *
யல்வேறல்லாப்பல்குழலாளையலைக்கின்றான் *
சொல்வேறென்னேயாருமனங்கன்றொழிறானே. (அஉ)

[கட்டளைக்கலித்துறை.]

தானென்றவர்முனெளித்தோடித்தன்னையிழந்தவர்முன் *
யானென்றுசென்றிடுங்காசிப்பிரானுடம்பென்பதென் போ
டேனென்றுவிட்டொழிந்தார்களிப்பாருவட்டாதவின்பத் *
தேனென்றடைந்தவர்க்குண்ணக்கிடைப்பதுநீவிடமே. (அங)

[கட்டளைக்கலிப்பா.]

நீவிடங்கொடுத்தேயமுதுண்டவத் *
தேவருக்கொளித்துத்திரிகின்றநீர் *
பாவிடும்மலர்ப்பஞ்சணைமேலிவள் *
பவளவாயமிர்துண்டாற்பழுதுண்டோ *
நாவிடங்கொண்டொருவன்முகங்கர *
நான்கினுநடிக்குந்திரகத்தைவிட் *
டாவிடங்கொண்டருட்காசிவீதிக்கே *
யாடல்செய்திடுமானந்தக்கூத்தரோ. (அச)

[நேரிசைவெண்பா.]

ஆனந்தவல்லியுடனானந்தக்கானகத்தே *
யானந்தக்கூத்தாடருட்கடலே ...யானந்தங்
கொள்ளத்தினைத்தாடுங்கூடாதேவிப்பிறவி *
வெள்ளத்தினைத்தாடுவீர். (அரு)

[கலிவிருத்தம்.]

வீரமென்பதுவின்மதற்கேகுணங் *
கோரமென்பதுகொண்டிருந்தாவதே *
னீரமென்பதிலையிவர்க்கென்றதால் *
வாரமென்பதிவாழவிமுத்தரோ. (அசு)

[ அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம். ]

முத்துநிரைத்தகுறுநகையீர்முளரிக்கணையான்கணைகடிகைப் *
பத்துநிரைத்தானினித்தொடுக்கிற்பாவைக்கொருதிக்கிலைபோலு *
மொத்துநிரைத்தவுடுநிரையோடொன்றேயலவோவெனவரும்பூ
கொத்துநிரைத்தபொழிற்காசிக்குழகற்கொருவர்கூறீரோ. (அஎ

[ கட்டளைக்கலித்துறை. ]

கூற்றடிக்கஞ்சிமுறையோவெனக்குலநான்மறையும் *
போற்றடிக்கஞ்சம்புகலடைந்தேழைப்போலவைத்தாற் *
சேற்றடிக்கஞ்சவயற்காசிநாதசெருப்படிக்கு *
மாற்றடிக்குந்தொண்டர்வில்லடிக்கும்புகன்மற்றில்லையே.(அஅ)

[ கட்டளைக்கலிப்பா. ]

இல்லையென்பதிலையோர்மருங்கிலே *
யெவ்வறங்களுமுண்டோர்மருங்கிலே *
கொல்லுகின்றதெழுதருங்கூற்றமே *
கூறுமாற்றமெழுதருங்கூற்றமே *
வில்லுமேருநாணும்பொன்னாகமே *
விடுகணைக்குண்டுநாணும்பொன்னாகமே *
மல்லன்மார்பின்மணிமுத்தமென்பமீத *
வாசமையர்க்கவிமுத்தமென்பதே. (அகூ)

[ கலிவிருத்தம். ]

என்பணிக்கும்பணியென்றிரந்தபோ *
தென்பணிக்கும்பணிநிக்குமேக்கென்று *
ொன்பணிக்கும்பணியாயிருந்ததோ *
ொன்பணிக்குமின்பாமகிமேலசர்க்கே. (கூய)

[ நேரிசைவெண்பா. ]

கேயூரமூரக்கிளர்தோரேகிமேலசர் *
மாயூரமூருமொருமைந்தற்குத் . . . . . . . . . . தீயூரு
மவ்வேலையிந்தாரடித்தொழும்புசெய்தொழுகு *
மிவ்வேலையிந்தாரொமக்கு. (கூக)

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

குருகைவிடுத்தாளெனக்குருகேகூறாய்சுகத்தைவிடுத்தாளென் *
மருகுவளருஞ்சுகமேசென்றறையாய்நிறைநீர்த்தெரிந்துபால் *
பருகுமனமேயனம்விடுத்தபடிசென்றுரையாய்படிவருளத் *
தருகுபசும்பொன்மதிற்காசியுடையார்வரித்தொழுடையார்க்கே(கூஉ

[ அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம். ]

உடுத்தகலையுமேகலையுமொழுகும்பணியும்விரும்பணியுந் *
தொடுத்தவளையுங்கைவளையுந் துறந்தாளாவி துறந்தாலு *
மடுத்ததுமதுபரந்தாமமதனைவிதழிப்பரந்தாமம் *
விடுத்துவிடுவாரலவெனப்போய்விளம்பீர்காசிவேதியர்க்கே.

[ நேரிசைவெண்பா. ] (௯௩)

வேதத்துரகர்விசகவகிலேசர் *
பாதத்துரகப்பரிபுரத்தார் ....................... நாதரிவர்
சேவடிக்கண்டாரோதிறம்பிழைத்துத்தென்புலத்தார் *
கோவடிக்கண்டாரோகுலைந்து. (௯௪)

[ கட்டளைக்கலித்துறை. ]

குலைவளைக்கும்பழுக்காய்முழுத்தாறுகொழுங்கமுகின் *
றலைவளைக்கும்பொழிற்காசிப்பிரான்றடங்கோட்டுப்பைம்பொன் *
மலைவளைக்கும்புயத்தாண்மையென்றுந்தெவ்வளைந்துகழைச் *
சிலைவளைத்துத்தன்படைவீடமர்க்களஞ்செய்திடினே. (௯௫)

[ சந்தத்தாழிசை. ]

மருங்கினின்மருங்கிலாதவள்குடியிருக்கவுமுடியில்வே *
வொருத்தியையிருத்திவைத்துமதிமோகமோகனிருபமாய் *
பிடிங்கிவண்மேலும்வைத்துளநயந்தோர்பிள்ளைபயந்தநீர் *
ங்குலத்திருவைமருவினின்றுபிறர்நாவளைக்கவிடமாகுமோ *
முடைந்ததெனவானினங்கண்மடிமடைதிறந்துபொழிபாலொடுங் *
காழுமடற்பொதியவிழ்ந்துகைதைசொரிசோறுமிட்டணிதிரைக்கையாற்
வயிற்றினைநிரப்புகின்றசுரகங்கைகுண்டகழியாநெடுங் *
கனநீள்குடுமிமதில்களேழுடையகாசிமேவுமகிலேசனே. (௯௬)

[ மடக்கு. பன்னிருசீரோரடி ஆசிரியவிருத்தம். ]

சரியோடொழுகுங்கரவளையேசரக்கோடொழுகுங்கரவளையே
தையற்கனமேதீவிடமேதவழுங்கனமேதீவிடமே *
சொரிவதடங்காக்கண்ணீரோதுளிக்குந்தடங்காக்கண்ணீரோ *
துயரோவதிதனந்தினமேசூரற்கழுத்தினந்தினமே *
கருகிப்புலர்ந்தநாவாயேகரைவந்திழியுநாவாயே *
கண்களுறங்காக்கழுநீரோகடலேகழியேகழுநீரோ *
யரிவையிவளுக்குருகீரோயனத்தோடுறங்குங்குருகீரோ *
யளியாரிதழிவனத்தாரோயருளானந்தவனத்தாரோ. (௯௭)

[ எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம். ]

வனத்தினுமொர்பொருபொதுமுகப்பினுநினைப்பவர் *
மனத்தினுநடித்தருள்செய்வார் *
சினக்கயல்விழிக்கடைகருக்கொள்கருணைக்கொடி *
திளைத்தமருமத்தர்தமதிடமா *
நனைக்கமலநெக்குடைதரக்குடைதுறைச்சுர *
நதிக்கரையின்முட்டைகொலெனுக் *
கனத்தபருமுத்தினையனைத்தனமினத்தொடு *
களிக்குமவிமுத்தநகர்கருதிரோ. (௧௮)

[ எழுசீர்க்கழிநெடில்ஆசிரியச்சந்தவிருத்தம் ]

கருமுகில்வெருப்பவறவிருளுமளகத்தினிவள் *
கதிர்முலைமுகட்டணையவணைமீதே *
வருகிலனொனிற்செவியிலொருமொழிசொலச்சமையம் *
வருகெனவழைக்கிலுடன்வருவார்காண் *
சுரநதிசுருட்டும்விரிதிரைகளொருமுத்திமக *
டுணைமுலைதிளைக்குமவர்மணநாளின் *
முரசொடுமுழக்குகுடமுழவெனவிரைக்கவலை *
முரலுமவிமுத்தநகருடையாரோ. (௧௯)

[ நேரிசையாசிரியப்பா. ]

உடைதிரைக்கங்கைநெடுநதித்துறையின் *
வலம்புரியென்னவாங்கிடம்புரிதிங்கள் *
வெள்ளிவீழென்னவிரிநிலாப்பரப்பும் *
பொன்வீழன்னபுரிசடைக்கடவுண் *
முடவுப்பட்டகடவுட்பைம்பூண் *
கறங்கெனச்சுழலுங்கால்விசைக்காற்று *
துமிழ்தருகுருதித்திரடெறித்தாங்குத் *
திசைதொறுந்தெறித்ததிரண்மணிக்குலங்கள் *
வானேறுகடுப்பவெரிநிற்றாக்கலுங் *
கையெடுத்தெண்டிசைக்களிறும்வீரிடத் *
தெய்வநாடகஞ்செய்வைதிகக்கூத்தன் *
வளைபகப்பாயும்வானரக்குழாத்தொரு *
கருமுகமந்திகால்விசைத்தெழுந்து *
பழுக்காயக்கமுகின்விழுக்குலைபறித்துப் *

படர்தருதோற்றஞ்சுடரோன்செம்ம *
றசமுகத்தொருவன்றிரண்முடிபிடுங்கி *
விசையிற்பாய்ந்தெனவிம்மிதம்விளைக்குந் *
தடமலர்ப்படப்பைத்தண்டலைக்காசிக் *
கடிநகர்புரக்குங்கண்ணுதற்செல்வன் *
வெம்புங்கடுவுந்தேம்பிழியாகச் *
செஞ்செவிகைப்பயான்றெரித்தசின்மொழி *
யஞ்செவிமடுத்தாங்களித்தனனதனால் *
வேத்தவைவியப்பவிளைத்தேன்பில்குந் *
தேத்தமிழ்தெளிக்குஞ்செந்நாப்புலவீர் *
மண்மகள்கவிகைத்தண்ணிழறுஞ்சப் *
புரவுபூண்டிந்திரதிருவொடும்பொலிந்து *
முடிவினுமுடியாமுழுநலங்கொடுக்குஞ் *
செந்நெறிவினவுதிராயினின்னிசைப் *
பாத்தொடுத்தடுத்தபரஞ்சுடரை *
நாத்தழும்பிருக்கவேத்துமினீரே. (௱)

திருச்சிற்றம்பலம்.

## காசிக்கலம்பகம்.

முற்றிற்று.

